ஷார்த்தத்தைக் கொடுப்பவர். 258. பத்ய: — நன்மை யானவர். 259. அனர்த்தஹா — ஆபத்தைப் போக்கடிப்பவர் 260. ஸத்யஸங்கர: — உண்மையான யுத்தத்தை உடையவர்.

(27) 261. சஷ்ப்ய: — இளம்புல்லாய் இருப்பவர். 262. பேன்ய: — நுரையாயிருப்பவர். 263. ப்ரவாஹ்ய: - பெருவெள்ளமாயிருப்பவர் 264. ஸிகத்ய: — மணலாயிருப்பவர். 265. ஸைகதாச்ரய: — மணலுக்கு இருப்பிடமாய் இருப்பவர் 266. இரிண்ய: — களர் நிலத்தில் இருப்பவர். 267. க்ராமணீ — கிராமத்தலைவர் 268. புண்ய: — புண்ணிய வடிவினர். 269. சரண்ய: — அடைக்கலம் புகுந்தவரைக் காப்பவர். 270. சுத்தசாஸன: — முறைப்படி கட்டளையிடுபவர்.

(28) 271. வரேண்ய: — மிகச்சிறந்தவர், போற்றத்தக்கவர். 272. யக்ஞபுருஷ: — யாகங்களில் போற்றப்படுபவர். 273. யக்ஞேச: — யாகங்களுக்கு ஈச்வரர். 274. யக்ஞநாயக: — யாகங்களுக்குத் தலைவர். 275. யக்ஞ கர்த்தா — யாகத்தைச் செய்பவர். 276 யக்ஞ போக்தா — யாகங்களில் கொடுக்கும் ஹவிஸ்ஸை ஏற்றுக் கொள்பவர் 277. யக்ஞவிக்னவிநாசக: — வேள்விகளுக்கு ஏற்படும் தடைகளைப் போக்கடிப்பவர்.

(29) 278. யக்ஞகர்ம பலாத்யக்ஷ: — யாகங்களின் பலனைக் கொடுக்கும் தலைவர் ("ஆவோ ராஜாநம்" என்ற வேதமந்திரம் யக்ஞங்களுக்கு அரசன் என்று பரமேச்வரனைக் கூறுகிறது. அசுவமேதம் முதல் எல்லாவிதமான யாகங்களுக்கும் பலனையளிப்பவர் பரமேச்வரரேயாவர். 279. யக்ஞமூர்த்தி: — வேள்வியே வடிவானவர். 280. அநாதுர: — ஆசையற்றவர். 281. ப்ரபத்ய: — நல்ல வழியாயிருப்பவர். 282 கிம்சில: — சிறு கற்களாக இருப்பவர்

283. கேஹ்ய: — உப்பரிகை(மாடி) யிலிருப்பவர். 284. க்ருஹ்ய: — வீட்டில் இருப்பவர். 285. தல்ப்ய: — கட்டில் முதலியவற்றில் இருப்பவர். 286. தனுகர:— செல்வத் துக்கு இருப்பிடமானவர்.

(30) 287. புலஸ்த்ய: — பக்தர்களைக் காக்க முன்நிற்ப வர் 288. க்ஷபண: — லோபியின் வடிவாகவுமிருப்பவர். 289. கோஷ்ட்ய: — மாட்டுக்கொட்டிலில் இருப்பவர். 290. கோவித்: — புலன்களுக்கு மேற்பட்ட அறிவாயிருப்பவர் 289. கோகீதஸத்க்ரிய: — பழக்கப்பட்ட நல்ல செயல்களை உடையவர், ஹாலஹாலமுண்டது, முப்புரமெரித்தது போன்ற வேதங்களால் புகழப்பட்ட சரித்திரங்களையுடை யவர். 292. ஹ்ரதய்ய: — ஆழமான மடுக்களில் இருப்பவர். 293. ஹ்ருதக்ருத்: — ஜீவர்களின் இதயஸ்தானத்தில் வசிப் பவர். 294. ஹ்ருத்ய: — மனதிற்கு இனிமையானவர். 295. கஹ்வரேஷ்ட: — மலையின் குகையில் இருப்பவர் (இதய குகையில் இருப்பவர்) 296. ப்ரபாகர: — ஒளி தரு பவர்.

(31)297. நிவேஷ்ப்ய: — பனித்துளியில் இருப்பவர். 298. நியத: — கால உருவானவர். 299. யந்தா: — நடத்து பவர் 300. பாம்ஸவ்ய: — மிகச்சிறிய தூசுகளில் இருப்பவர். 301. ஸம்ப்ரதாபன: — மிகவும் தபிக்கச்செய்பவர். 302. சுஷ்க்ய: — காய்ந்த கட்டைகளில் இருப்பவர். 303. ஹரித்ய: — ஈரமான பசுமையான மரங்களில் இருப்பவர். 304. பூதாத்மா: — புனிதமான ஆத்மாவாக இருப்பவர். 305. ரஜஸ்ய: — பெரிய தூள்களில் இருப்பவர். 306. ஸாத்விகப்ரிய: — நல்ல குணமுடையவர்களான பக்தர் களிடம் மிகவும் பிரியம் உள்ளவர்.

(32) 307. லோப்ய: — கெட்டியான தரையில் இருப் பவர். 308. அலப்ய: — சிறிய புல்களில் இருப்பவர். 309. பர்ணசத்ய: — உலர்ந்த இலைகளின் குவியல்களில் இருப்

பவர் 310. பர்ண்ய: — பச்சிலைகளில் இருப்பவர். 311. பூர்ண: — நிறைந்தவர் 312. புராதன: — பழமையானவர். 313. பூத: — ஜீவர்களாய் இருப்பவர். 314. பூதபதி: — ஜீவர்களுக்குத் தலைவர் 315. பூப: — அரசராயிருப்பவர். 316. பூதர: — பூமியைத் தாங்குபவர், இமயம் முதலிய மலைகளின் உருவாக இருப்பவர். 317. பூதராயுத: — மலையை வில்லாகக்கொண்டவர்.

(33) 318. பூதஸங்க: — பூதங்களின் கூட்டமாய் இருப்பவர் (ப்ரமத கணங்களை உடையவர்) 319. பூத மூர்த்தி:— பூதங்களின் உருவானவர், (அக்னி, வாயு, ஜலம், ஆகாயம், பூமி என்ற ஐம்பூதங்களின் உருவானவர்) 320. பூதஹா — பூதங்களைக் கொல்பவர். 321. பூதிபூஷண: — திருநீற்றினையே அணிகலனாகக் கொண்டவர். 3-2. மதன: - மன்மதன் வடிவாயிருப்பவர் 323. மாதக: — காமனையைக் கொடுப்பவர் 324. மாத்ய: — மதங்கொண்டவர் (மதம் பிடித்தவனை அடக்குபவர்.) 325. மதஹா — கொழுப்பை அடக்குபவர். 326. மதுரப்ரிய: —இனிமையை விரும்புபவர்.

(34) 327. மது: — தேனாய் இருப்பவர் 328. மது கர: — தேன் சேர்க்கும் வண்டாக இருப்பவர் 329. க்ரூர: — கடுமையானவர். 330. மதுர: — இனிமையானவர் 331. மதனாந்தக: — காமனை ஜயித்தவர் 332. நிரஞ்ஜன: — பற்றில்லாதவர் 333. நிராதார: — ஆதாரம் அற்றவர் (தாமே அனைத்துக்கும் ஆதாரமாயிருத்தலால் தமக்கு வேறு ஆதாரம் எதுவும் இல்லாதவர் என்பதாம்) 334. நிர்லிப்த: — ஒட்டாதவர் 335. நிருபாதிக: — சேர்க்கை இல்லாதவர்.

(35) 336 நிஷ்ப்ரபஞ்ச: — உலகிற்கு அப்பாற்பட் டவர். 337. நிராகார: — உருவமற்றவர் 338. நிரீஹ: — ஆசையற்றவர். 339. நிருபத்ரவ: — தொல்லைகளைப் போக்கடிப்பவர் 340. ஸத்வ: — ஸத்வகுணமுள்ளவர்

341. ஸத்வ குணோபேத! — நல்ல குணங்களோடு கூடியவர். 342' ஸத்வவித்: — நல்லனவற்றையெல்லாம் அறிந்தவர். 343. ஸாத்வதப்ரிய: — கிருஷ்ணனிடம் பிரியமுள்ளவர். (மஹாபாரதத்தில் அனுசாஸன பருவத்தில் பரமேச்வரன் கிருஷ்ணனுக்கு அருள் செய்த வரலாற்றைக் காணலாம். கிருஷ்ணன் வாக்கினாலேயே சிவபிரானின் ஒரு ஆயிரம் திருநாமங்கள் அங்கு கூறப்பட்டுள்ளதும் காணலாம்).

(36) 344. ஸத்வநிஷ்ட: —ஸத்துவ குணத்தில் ஆழ்ந்து நிலைபெற்றவர். 345. ஸத்வ மூர்த்தி: — ஸத்வ குணமே உருவானவர் 346. ஸத்வேச: —நற்குணங்களுக்குத் தலைவர் 347. ஸத்வவித்தம: — நற்குணமறிந்தவர்களில் முதன்மையானவர் 348. ஸமஸ்த ஜகதாதார! — எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாயிருப்பவர் 349. ஸமஸ்த குணஸாகர: - அனைத்து நற்குணங்களின் கடலாயிருப்பவர்.

(37) 350. ஸமஸ்த துக்க வித்வம்ஸி: — எல்லாத் துன்பங்களையும் போக்கடிப்பவர். 351. ஸமஸ்தானந்த காரண: — எல்லாவிதமான மகிழ்ச்சிக்கும் காரணமானவர். 352. ருத்ராக்ஷமாலா பரண: — ருத்ராக்ஷமாலையைஆபரணமாகக்கொண்டவர். 353. ருத்ராக்ஷப்ரியவத்ஸல: — ருத்ராக்ஷத்தில் பிரியம் உள்ளவர்களிடம் அன்புள்ளவர்.

(38) 354. ருத்ராக்ஷவக்ஷா: — ருத்திராக்ஷத்தை மார்பில் கொண்டவர். 355. ருத்ராக்ஷரூப: — ருத்ராக்ஷமே உருவானவர். (ருத்திராக்ஷத்தையே சிவலிங்கமாகப் பாவித்துப் பூசை செய்வது உண்டு) 356. ருத்ராக்ஷபக்ஷக:— ருத்திராக்ஷத்தின் பக்கத்தில் இருப்பவர். 357. விச்வேச்வர:— உலகத்தின் தலைவர். ("விச்வாதிக" என்பது வேதம்). 358. வீரபத்ர: — தக்ஷனது யாகத்தை அழிக்க வீரபத்திரராகியவர். 359. ஸம்ராட்: — சக்கரவர்த்தி. 360. தக்ஷமகாந்தக; — தக்ஷனது யாகத்தை அழித்தவர்.

39. 361. விக்னேச்வர: — விநாயகர் வடிவாய் இருப்பவர். 362. விக்னகர்த்தா: — தடைகளைச் செய்பவர். 363. குரு: — தக்ஷிணாமூர்த்தி வடிவில் குருவாக இருப்பவர். 364. தேவசிகாமணி: — தேவர்களுக்குத் தலையில் உள்ள மணி போன்றவர், தேவர்களுள் சிறந்தவர். 365. புஜங்கேந்த்ர லஸத்கண்ட: — பாம்பைக் கழுத்தில் போட்டுக் கொண்டவர். 366. புஜங்காபரணப்ரிய: — பாம்பை ஆபரணமாகக் கொள்வதில் பிரியம் உள்ளவர்.

(40) 367. புஜங்க விலஸத் கர்ண: — பாம்பைக் காதில் (காதணியாக) கொண்டவர். 368 புஜங்கவலயாவ்ருத: — பாம்புகளால் வட்டமாகச் சூழப்பட்டவர் 369. முனிவந்த்ய: — முனிவர்களால் வணங்கப்படுபவர். (தக்ஷிணாமூர்த்தி கோலத்தில் ஸனகாதி முனிவர்களால் வணங்கப்பட்டு அவர்கட்கு ஞானத்தை உபதேசித்தவர்) 370. முனிச்ரேஷ்ட: — முனிவர்களில் உயர்ந்தவர் 371. முனிவ்ருந்தநிஷேவித: — முனிவர்கள் கூட்டத்தால் தொழப்பட்டவர்.

(41) 372. முனிஹ்ருத்புண்டரீகஸ்த: — முனிவர்களின் இதயமாகிற தாமரையில் இருப்பவர். 373, முனிஸங்கைகஜீவன: — முனிவர்களின் கூட்டத்துக்கு ஒரே ஜீவனாய் இருப்பவர் (அதாவது முனிவர்களின் உயிராய் இருப்பவர்) 374. முனிம்ருக்ய: — முனிவர்களால் தேடப்படுபவர் (துர்வாஸர், நாரதர் முதலிய முனிவர்கள்) 375. வேதம்ருக்ய: — வேதங்களால் தேடப்படுபவர். 376. ம்ருகஹஸ்த: — கையில் மானை உடையவர். 377. ம்ருகேச்வர: — மிருகங்களின் தலைவர்.

(42) 378. ம்ருகேந்த்ரசர்ம வஸன: — சிங்கத்தின் தோலை உடையாகக் கொண்டவர், புலியின் தோலை உடுத்தியவர். 379. நாரஸிம்ஹநிபாதன: — நரசிம்மரை வீழ்த்தியவர் ("ஹரிம் ஹரந்தமனுயந்தி தேவா:" என்கிற

வேதம், சிவபெருமான் சரபமூர்த்தியாகத் தோன்றி நர ஸிம்மரை அடக்கியதாகக் கூறுகின்றது.) 380. ம்ருத்யுஞ் ஜய: — யமனை வென்றவர். 381. ம்ருத்யு ம்ருத்யு: — காலனுக்கும் காலன். (காலகாலன்) 382. அபம்ருத்யு விநாசக: — அகாலத்தில் ஏற்படும் மரணத்தைத் தவிர்ப் பவர்.

(43) 383. துஷ்டம்ருத்யு: — யமனைத் தூஷிப்பவர். 384. அதுஷ்டேஷ்ட: — துஷ்டத்தன்மையில்லாத நல்லவர் களிடம் பிரியமுள்ளவர். 385. ம்ருத்யுஹா — காலனை விரட்டியவர். 386. ம்ருத்யுபூஜித: — யமனால் பூஜிக்கப் பட்டவர். 387. ஊர்த்வ: — மேலானவர். 388. ஹிரண்ய: —பொன்னாய் இருப்பவர். 389. பரம: — எல்லாவற்றுக்கும் மேலாய் இருப்பவர். 390. நிதனேச: — ஸம்ஹாரத் தொழில் செய்பவர். 391. தனாதிப: — செல்வத்துக்கு அரசர்.

(44) 392. யஜுர்மூர்த்தி: — யஜுர் வேதத்தை உருவாய்க் கொண்டவர். 393. ஸாமமூர்த்தி: — ஸாம வேதமாய் இருப்பவர். 394. ருங்மூர்த்தி: - ருக் வேதத்தை உருவாய்க் கொண்டவர். 395. மூர்த்திவர்ஜித: — உருவ மற்றவர். 396. வ்யக்த: — நன்கு தெரிபவர். 397. அவ் யக்ததம: — உருவமில்லாதவர். (ப்ரம்மம், மாயைக்கும் பெயர்) 398. அவ்யக்த: — பரம்பொருளானவர். 399. வ்யக்தாவ்யக்ததம: — உருவமுள்ளதாயும் இல்லாததாயும் இருப்பவர். 400. ஜவீ: — வேகமாய்ச் செல்வர்.

(45) 401. லிங்கமூர்த்தி: — லிங்கத்தின் உருவமாய் இருப்பவர். 402. அலிங்காத்மா — பும், ஸ்த்ரீ, நபும்ஸக ஆகிய மூன்றுமில்லாத பரமாத்மஸ்வரூபி. 403. லிங்கா லிங்காத்ம விக்ரஹ: — லிங்கமாயும் லிங்கமில்லாததாயும் ஆன உடலையுடையவர். 404. க்ரஹக்ரஹ: — நவக் கிரஹங்களுக்கும் கிரஹமானவர். 405. க்ரஹாதார: —

கிரஹங்களுக்கும் ஆதாரமாய் இருப்பவர். 406. க்ரஹா கார: — கிரஹங்களின் உருவாய் இருப்பவர். 407. க்ர ஹேச்வர: — கிரஹங்களுக்குத் தலைவர்.

(46) 408. க்ரஹக்ருத் — கிரஹங்களை உண்டாக்கு பவர். 409. க்ரஹஹ்ருத் — கிரஹங்களின் இதயத்தில் இருப்பவர். 410. க்ராஹீ — கிரஹித்துக் கொள்பவர் (எடுத்துக் கொள்பவர்). 411. க்ராஹ க்ராஹ விலக்ஷண:- பிடித்துக் கொள்வது, பிடிப்பில்லாதது இவையெல்லா வற்றுக்கும் மேலானவர். 412. கல்பாகார: — கல்பங் களின் உருவானவர். 413. கல்பகர்த்தா — கல்பங்களைச் செய்பவர். 414. கல்ப லக்ஷணதத்பர: — கல்ப சூத்திரங் கள் வேதலக்ஷணங்கள் இவைகளில் சொல்லப்பட்டவர்.

(47) 415. கல்ப: — உலகம் முடியும் நேரத்துக்குக் கல்பம் என்று பெயர். அந்த உருவமாயிருப்பவர். 416. கல் பாக்ருதி: — கல்பத்திற்கு உருவம் கொடுப்பவர். 417. கல்ப நாசக: — கல்பத்தை அழிப்பவர். 418. கல்ப கல்ப: — கல்பத்தைச் செய்பவர். (ஆபஸ்தம்பர் முதலிய மஹரிஷி களுக்கு கல்பம் செய்யும் சக்தியைக் கொடுத்தவர்) 419. பரமாத்மா — எங்கும் நிறைந்த பரம்பொருளாய் இருப் பவர். 420. ப்ரதானாத்மா — ஸமஷ்டி ஜீவனாய் இருப்ப வர். 421. ப்ரதானபுருஷ: — படைக்கும் தொழிலைச் செய்பவர். 422. சிவ: — மங்களமானவர்.

(48) 423. வேத்ய: — அறியத்தக்கவர். 424. வைத்ய: - எல்லாக்கலைகளையுமறிந்தவர். 425. வேதவேத்ய: — வேதங் களால் மட்டுமே அறியத்தக்கவர். 426. வேதவேதாந்த ஸம்ஸ்துத: — வேதம் வேதாந்தம் இவைகளால் நன்கு துதிக்கப்பட்டவர். 427. வேதவக்த்ர: — வேதத்தையே முகமாகக் கொண்டவர், 428. வேதஜிஹ்வ: — வேத மாகிற நாக்கைக் கொண்டவர்: 429. விஜிஹ்வ: — நாக்கு இல்லாதவர். 430. ஜிஹ்மநாசக: — கபடத்தை ஒழிப்பவர்.

(49) 431. கல்யாணரூப: — மங்களமே வடிவானவர். 432. கல்யாண: — மங்களமாய் இருப்பவர். 433. கல்யாணகுண ஸம்ச்ரய: — கல்யாண குணங்கள் அனைத்தும் நிரம்பப் பெற்றவர். 434. பக்தகல்யாணதர: — பக்தர்களுக்கு மங்களத்தைக் கொடுப்பவர். 435. பக்தகாமதேனு: — பக்தர்கள் விரும்பியவையெல்லாம் கொடுப்பதில் காமதேனு (தெய்வீகப்பசு) வாய் இருப்பவர். 436. ஸுராதிப: — தேவர்களின் தலைவர்.

(50) 437. பவன: — காற்றாய் இருப்பவர். 438. பாவக: — நெருப்பாய் இருப்பவர். 439. வாம: — வாமர் என்ற பெயர் கொண்டவர், அழகியவர். 440. மஹாகால: — காலத்துக்கும் பெரியவர். 441. மதாபஹ: — கர்வத்தைப் போக்கடிப்பவர். 442. கோரபாதகதாவாக்னி:- மிகக்கடுமையான பாபங்களுக்கு காட்டுத்தீயாய் இருப்பவர் (அல்லது தீ போல் அழிப்பவர்). 443. தவபஸ்மகணப்ரிய: — காட்டில் கிடைக்கும் திருநீற்றில் அன்பு கொண்டவர்.

(51) 444. அனந்த ஸோமஸூர்யாக்னி மண்டல ப்ரதிமப்ரப: — எல்லையற்ற சந்திரன், சூரியன், அக்னி ஆகிய கூட்டங்களுக்கு ஒப்பானவர். 445. ஜகதேகப்ரபு: — உலகிற்கு ஒரே தலைவரானவர். 446. ஸ்வாமீ — யஜமானர். 447. ஜகத்வந்த்ய: — உலகத்தால் வணங்கப் படுபவர். 448. ஜகன்மய: — உலகமே உருவானவர்.

(52) 449. ஜகதானந்தத: — உலகிற்கு மகிழ்ச்சியைக் கொடுப்பவர். 450. ஜன்மஜராமரணவர்ஜித: — பிறப்பு, கிழத்தன்மை, இறப்பு இவை ஒன்றும் இல்லாதவர். 451. கட்வாங்கநீதிமான்: — நீதியில் சிறந்த அரசனான கட்வாங்கன் உருவில் இருப்பவர். 452. ஸத்ய: — முக்காலும் உண்மையானவர். 453. தேவதாத்மாத்மஸம்பவ: — தேவக் கூட்டங்களின் ஒரே ஆத்மாவாய்த் தோன்றியவர்.

(53) 454. கபாலமாலாபரண: — மண்டை ஓடுகளால் ஆன மாலையை ஆபரணமாகத் தரித்தவர். 455. கபாலீ—கபாலத்தைக் கையில் கொண்டவர். 456. விஷ்ணு வல்லப: — மோஹினி வடிவெடுத்த விஷ்ணுவுக்குக் கணவராயிருப்பவர். 457. கமலாசனகாலாக்னி: — தாமரையை இருப்பிடமாகக் கொண்ட பிரமதேவனுக்குக் காலாக்னியாக இருப்பவர். 458. கமலாசனபூஜித: — பிரமதேவனால் பூஜிக்கப்பட்டவர்.

(54) 459. காலாதீச: — காலத்திற்கு மேற்பட்டவர். 460. திரிகாலக்ஞ: — முக்காலமும் அறிந்தவர். 461. துஷ்டாவக்ரஹகாரக: — துஷ்டர்களுக்குத் தொல்லை கொடுப்பவர். 462. நாட்யகர்த்தா: — நடனக் கலைக்குக் கர்த்தா. 463. நடவர: — நாட்டியம் ஆடுவதில் சிறந்தவர். 464. மஹா நாட்ய விசாரத: — உலகம் மறையும் சமயம் செய்யப்படும் நடனத்தை நன்கு அறிந்தவர்.

(55) 465. விராட்ரூபதர: — ஸமஷ்டி ஜீவனின் உருவை எடுத்துக் கொண்டவர். 466. தீர: — தைரியம் மிக்கவர். 467. விராட் — எல்லாவற்றுக்கும் மேலானவர். 468. வ்ருஷபவாஹன: — காளைமாட்டை வாஹனமாகக் கொண்டவர். 469. வ்ருஷாங்க: — தர்மமே உருவமான வெள்ளை எருதைக் கொடியாகக் கொண்டவர். 470. வ்ருஷபாதீச: — வ்ருஷபத்திற்குத் தலைவர். 471. வ்ருஷாத்மா: — தர்மத்தின் சொரூபமான வ்ருஷபத்தின் ஆத்மாவாயிருப்பவர். 472. வ்ருஷபத்வஜ: — காளை மாட்டைக் கொடியாகவுடையவர்.

(56) 473. மஹோந்நத: — மிகவும் உயர்ந்தவர். 474. மஹாகாய: — பெரிய சரீரத்தை உடையவர். 475. மஹாவக்ஷ: — பெரிய (அகலமான) மார்பை உடையவர். 476. மஹாபுஜ: — பெரிய கைகளையுடையவர். 477. மஹாஸ்கந்த: — பெரிய தோள்பட்டைகளை உடையவர்.

478. மஹாக்ரீவ: —பெரிய கழுத்தையுடையவர். 479. மஹா வக்த்ர: — பெரிய முகத்தையுடையவர். 480. மஹாசிர: — பெரிய தலையையுடையவர்.

(57) 481. மஹாஹனு: — ஸாமுத்திரிகாலக்ஷணப்படியான சிறந்த கன்னப்ரதேசத்தையுடையவர். 482. மஹா தம்ஷ்ட்ர: — சிறந்த (நிறைந்த) பற்களையுடையவர். 483. மஹௌஷ்ட:— சிறப்பான உதடுகளையுடையவர். 484. மஹோதர: — உலகம் வசிக்கும் இடமான பெரிய வயிற்றையுடையவர். 485. ஸுந்தரப்ரூ: — அழகான புருவங்களையுடையவர். 486. ஸுநயன: — அழகிய கண்களையுடையவர், விசேஷமாக மூன்றுவது கண்ணையுடையவர். 487. ஸுலலாட: — அழகிய (பரந்த) நெற்றியை உடையவர். 488. ஸுகந்தர: — அழகிய கழுத்தையுடையவர்.

(58) 489. ஸத்யவாக்ய: — உண்மையே உருவானவர். 490. தர்மவேத்தா — தர்மத்தை அறிந்தவர். 491. ஸத்யக்ஞ: — உண்மையை அறிந்தவர். 492. ஸத்ய வித்தம: — உண்மையை அறிந்தவர்களுள் உயர்ந்தவர். 493. தர்மவான் — தர்மத்தைத் தன்னிடமே கொண்டவர். 494. தர்மநிபுண: — தர்மத்தை அறிந்து அனுஷ்டிப்பதில் சிறந்தவர். 495. தர்மாதர்ம ப்ரவர்த்தக: — தர்மம், அதர்மம், இரண்டிலும் ஜீவர்களை ஈடுபடும்படிச் செய்பவர்.

(59) 496. க்ருதக்ஞ: — செய்ந்நன்றியறிந்தவர். 497. க்ருதக்ருத்யாத்மா — செய்ய வேண்டியதை எல்லாம் செய்தவர். (அதனால் இனிச்செய்ய வேண்டியது ஒன்றுமில்லாதவர்.) 498. க்ருதக்ருத்ய: — ஜீவர்களைக் கடமையைச் செய்யத் தூண்டுபவர். 499. க்ருதாகம: — ஆகமங்களை இயற்றியவர். 500. க்ருதவித் — நடந்ததை அறிந்தவர். 501. க்ருத்யவித் — செய்ய வேண்டியதை அறிந்தவர். 502. ச்ரேஷ்ட: — மேலானவர். 503. க்ருதக்ஞ:—

நன்கு தெரிந்தவர். 504. ப்ரியக்ருத்தம: — அன்பு காட்டு பவரில் மேலானவர்.

(60) 505. வ்ரதக்ருத் — விரதத்தைச் செய்பவர். 506. வ்ரதவித்ச்ரேஷ்ட: — விரதம் அறிந்தவர்களில் உயர்ந்தவர். 507. வ்ரதவித்வான் — விரதங்களை அனுஷ் டிப்பதில் வித்வான் (நிபுணர்). 508. மஹாவ்ரதீ — எல்லா விரதங்களையும் தன்னிடமே கொண்டவர். 509. வ்ரதப்ரிய: — விரதங்களில் பிரியம் உள்ளவர். 510. வ்ரதாதார: — விரதங்களுக்கு ஆதாரமாய் இருப்பவர். 511. வ்ரதாகார: — விரதமே உருவானவர். 512. வ்ர தேச்வர: — விரதங்களுக்குத் தலைவர்.

(61) 513. அதிராகீ: — மிகுந்த பற்றுள்ளவர் (அல்லது ஆசையைக் கடந்தவர் என்றும் சொல்லலாம்). 514. வீத ராகீ: — ஆசையற்றவர். 515. ராகஹேது: — ஆசைக் குக் காரணமாயிருப்பவர். 516. விராகவித் — ஆசையைத் துறப்பது எப்படி என்று அறிந்தவர். 517. ராகக்ன: — ஆசையைப் போக்கடிப்பவர். 518. ராகசமன: — ஆசையை அடங்கும்படிச் செய்பவர். 5 9. ராகத: — ஆசையைக் கொடுப்பவர். 520. ராகிராகவித் — பேராசைக்காரரது நிலையைத் தெரிந்தவர்.

(62) 521. வித்வான் — பண்டிதர். 522. வித்வத்தம: — வித்வான்களில் முதன்மையானவர். 523. வித்வத்ஜன மானஸ ஸம்ச்ரய: — பண்டித ஜனங்களின் மனதை இருப் பிடமாகக் கொண்டவர். 524. வித்வத்ஜனாச்ரய: — பண்டித ஜனங்களுக்கு ஆதாரமாயிருப்பவர். 525. வித் வத்ஜன ஸ்தவ்ய பராக்ரம: — பண்டித ஜனங்களால் துதிக் கப்படும் வல்லமை பெற்றவர்.

(63) 526. நீதிக்ருத் — நியாயம் செய்பவர். 527. நீதிவித் — நியாயம் தெரிந்தவர். 528. நீதிப்ரதாதா —

பக்தர்களுக்கு நியாயம் கிடைக்கும்படிச் செய்பவர். 529. நீதிவித்ப்ரிய: — நியாயம் தெரிந்தவர்களிடம் அன்பு கொண்டவர். 530. விநீதிவத்ஸல: — வணக்கத்தோடு கூடியவர்களிடம் அன்புடன் இருப்பவர். 531. நீதிஸ்வரூப :— நியாயமே உருவானவர். 532. நீதிஸம்ச்ரய: — நியாயத்துக்கு இருப்பிடமானவர்.

(64) 533. க்ரோதவித் — கோபம் தெரிந்தவர். 534. க்ரோதக்ருத் — கோபத்தைச் செய்பவர். 535. க்ரோத ஜனக்ருத் — கோபம் உடைய ஜனங்களை உண்டு பண்ணுபவர். 536. க்ரோதரூபத்ருக் — கோபத்தின் உருவம் கொண்டவர். 537. ஸக்ரோத: — கோபத்தோடு கூடியவர். 538. க்ரோதஹா — கோபத்தைப் போக்கடிப்பவர். 539. க்ரோதி ஜனஹா — கோபம் அடைந்த ஜனங்களை ஒழிப்பவர். 540. க்ரோதகாரண: — கோபத்திற்குக் காரணமாயிருப்பவர்.

(65) 541. குணவான் — நல்ல குணம் உடையவர். 542. குணவித்ச்ரேஷ்ட: — குணமுள்ளவர்களுள் உயர்ந்தவர். 543. நிர்குண: — குணமற்றவர். 544. குணவித்ப்ரிய:— குணமறிந்தவர்களிடத்தில் பிரியம் உள்ளவர். 545. குணாதார: — குணங்களுக்கு இருப்பிடமாய் இருப்பவர். 546. குணாகார: — குணமே உருவானவர். 547. குணக்ருத் — முக்குணங்களையும் செய்பவர். 548. குணநாசக: — முக்குணங்களையும் போக்கடிப்பவர்.

(66) 549. வீர்யவான் — வல்லமையுள்ளவர். 550. வீர்யவித்ச்ரேஷ்ட: — வல்லமையறிந்தவர்களில் உயர்ந்தவர். 551. வீர்யவித் — வல்லமையறிந்தவர். 552. வீர்யஸம்ச்ரய: — வல்லமைக்கு இருப்பிடமானவர். 553. வீர்யாகார: — வல்லமையே உருவானவர். 554. வீர்யகர:— வல்லமையைச் செய்பவர். 555. வீர்யஹா — வல்லமையைப் போக்கடிப்பவர். 556. வீர்யவர்த்தக: — வல்லமையை வளர்ப்பவர்.

(67) 557. காலவித் — காலமறிந்தவர். 558. காலக்ருத் — காலத்தைச் செய்பவர். 559. கால: — காலமாய் இருப்பவர். 560. பலக்ருதி — பலத்தைச் செய்பவர். 561. பலவித் — பலத்தையறிந்தவர். 562. பலீ — பலமுள்ளவர். 563. மனோன்மன: — மனோன்மனர் என்ற பெயர் பெற்றவர். 564. மனோரூப: — மனமே உருவாய் இருப்பவர். 565. பலப்ரமதன: — சத்துருக்களின் பலத்தை நாசம் செய்பவர். 566. பல: — பலமுடையவர்.

(68) 567. வித்யாப்ரதாதா — கல்வியை நன்கு கொடுப்பவர். 568. வித்யேச: — படிப்பிற்குத் தலைவர். 569. வித்யாமாத்ரைகஸம்ச்ரய: — ஆத்மவித்யையே ஆதாரமாகக் கொண்டவர். 570. வித்யாகார: — வித்யையே உருவானவர். 571. மஹாவித்ய: — மஹாவித்யை எனப்படும் ஸ்ரீவித்யையாக இருப்பவர். 572. வித்யாவேத்ய விசாரத: — ஆத்மவித்யையை அறிவதில் சிறந்தவர்.

(69) 573. வஸந்தக்ருத் — வஸந்தருதுவை உண்டாக்குபவர். 574. வஸந்தாத்மா — வஸந்தருதுவே உருவானவர். 575. வஸந்தேச: — வஸந்த ருதுவின் தலைவர். 576. வஸந்தத: — வஸந்தருதுவைத் தாண்டியவர். 577. க்ரீஷ்மாத்மா — க்ரீஷ்மருதுவாய் இருப்பவர். 578. க்ரீஷ்மக்ருத்— க்ரீஷ்மருதுவை உண்டாக்குபவர். 579. க்ரீஷ்மவர்த்தக: — க்ரீஷ்மருதுவை வளரச் செய்பவர். 580. க்ரீஷ்ம நாசக: — க்ரீஷ்மருதுவை அழிப்பவர்.

(70) 581. ப்ராவ்ருட்க்ருத் — மழைகாலத்தை உண்டாக்குபவர். 582. ப்ராவ்ருஷாகால: — மழைக்காலமாய் இருப்பவர். 583. ப்ராவ்ருட்கால ப்ரவர்த்தக: — மழை காலத்தைத் தொடங்கும்படி செய்பவர். 584. ப்ராவ்ருட் ப்ரவர்த்தக: — மழை காலத்தை வளர்ப்பவர். 585. ப்ராவருட் ப்ராவ்ருண்நாத ப்ரணாசக: -- வர்ஷருது, அதன் தலைவர் ஆகிய எல்லாவற்றையும் அழிப்பவர்.

(71) 586. சரதாத்மா: — சரத் காலத்தின் உருவமா யிருப்பவர். 587. சரத்தேது: — சரத்ருதுவுக்குக் காரண மாயிருப்பவர். 588. சரத்காலப்ரவர்த்தக: — சரத் காலத்தைத் தொடங்கும்படிச் செய்பவர். 589. சரந் நாத: — சரத்ருதுவுக்குத் தலைவர். 590. சரத்காலநாசக: — சரத்காலத்தை ஒழிப்பவர். 591. சரதாச்ரய: — சரத் ருதுவுக்கு ஆதாரமாய் இருப்பவர்.

(72) 592. ஹிமஸ்வரூப: — பனியின் உருவமாயிருப் பவர். 593. ஹிமத: — பனியைக் கொடுப்பவர். 594. ஹிமவான் — பனிமலையாய் இருப்பவர். 595. ஹிம நாசக: — பனியை ஒழிப்பவர். 596. ப்ராச்யாத்மா — கிழக்கு திசையாயிருப்பவர். 597. தக்ஷிணாகார: — தெற்கு திசையின் உருவானவர். 598. ப்ரதீச்யாத்மா — மேற்குத் திசையாய் இருப்பவர். 599. அந்தராக்ருதி: — இவை களுக்கு நடுவில் இருப்பவர்.

(73) 600. ஆக்னேயாத்மா — தென்கிழக்கு மூலையாக இருப்பவர். 601. நிர்ருதீச: — தென் மேற்கின் தலைவர். 602. வாயவ்யாத்மா — வடமேற்கு மூலையாயிருப்பவர். 603. ஈசநாயக: — வடகிழக்கின் தலைவர். 604. ஊர்த்வாதஸ்ஸ்திகாகார: — ஆகாயம், பூமி திசைகள் இவை களின் உருவானவர். 605. நானாதேசகநாதக: — பல தேசங்களுக்குத் தலைவராயிருப்பவர்.

(74) 606. ஸர்வபக்ஷிம்ருகாகார: — எல்லாவிதமான பறவைகள், மிருகங்கள் இவைகளின் உருவாயிருப்பவர். 607. ஸர்வபக்ஷிம்ருகாதிப: — எல்லாவிதமான பறவைகள் மிருகங் கள் இவைகளுக்குத் தலைவர். 608. ஸர்வபக்ஷிம்ருகாதார: — எல்லாவிதமான பறவைகள் மிருகங்கள் இவைகளுக்கு இருப்பிடமானவர். 609. ம்ருகாத்யுத்பத்தி காரண: — மிருகங்கள் முதலியவைகள் உண்டாவதற்குக் காரண மானவர்.

(75) 610. ஜீவாத்யக்ஷ: — உயிருள்ள பிராணிகளுக்குத் தலைவர். 611 ஜீவவந்திய: — ஜீவர்களால் வணங்கப்படுபவர். 612. ஜீவினும் ஜீவரக்ஷக: — உயிரோடு இருப்பவர்களுக்கு உயிரைக் காப்பாற்றிக் கொடுப்பவர். 613. ஜீவக்ருத் — ஜீவர்களை உண்டுபண்ணுபவர். 614. ஜீவஹா — ஜீவர்களை அழிப்பவர். 615. ஜீவஜீவன: — உயிர் உள்ளவர்களுக்கு பிழைக்கும் வழி தேடிக்கொடுப்பவர். 616. ஜீவஸம்ச்ரய: - ஜீவர்களுக்கு அடையுமிடமாய் இருப்பவர்.

(76) 617. ஜ்யோதிஸ்வரூப: — ஒளி வடிவமாயிருப்பவர். 618. விச்வாத்மா — உலகமாயிருப்பவர். 619. விச்வநாத: — உலகத்திற்குத் தலைவர். 620. வியத்பதி: — ஸ்வர்க்கத்திற்குத் தலைவர். 621. வஜ்ராத்மா — வஜ்ராயுதமாய் இருப்பவர். 622. வஜ்ரஹஸ்த: — வஜ்ராயுதத்தைக் கையில் கொண்ட இந்திரனாய் இருப்பவர். 623. வஜ்ரேச: — வஜ்ராயுதத்திற்குத் தலைவர். 624. வஜ்ரபூஷித: — வைரங்களால் அலங்கரிக்கப்பட்டவர்.

(77) 625. குமார: — முருகனாய் இருப்பவர். 626. குரு: — உலகத்திற்கு குருவாய் இருப்பவர். 627. ஈசான: — வடகிழக்கு திசைக்குத் தலைவர். 628. கணாத்யக்ஷ: — சிவ கணங்களுக்குத் தலைவர். 629. கணாதிப: — விநாயகர் உருவானவர். 630. பிநாகபாணி: — பிநாகம் என்ற வில்லைக் கையில் கொண்டவர். 631. ஸௌர்யாத்மா — சூரியனுக்கும் ஒளி தருபவர். 632. ஸோம ஸௌர்யாக்னி லோசன: — சந்திரன், ஸூரியன், அக்னி ஆகிய மூவரையும் கண்களாய்க் கொண்டவர்.

(78) 633. அபாரரஹித: — தனக்கு மேலானது ஒன்றும் இல்லாதவர். 634. சாந்த: — அமைதியானவர். 635. தாந்த: — புலன்களை வென்றவர். 636. தமயிதா — பக்தர்களுக்கு தமம் என்ற ஆத்ம குணத்தைக் கொடுப்பவர். 637. தம: — ஆத்ம குணங்கள் எட்டில் இரண்டாவதான

திமம் ஆக இருப்பவர். 638. ரிஷி: —தைத்திரீயோபநிஷத்தில் "ருத்ரோ மஹரிஷி" என்று சொன்னபடி ரிஷிகளில் முதலா னவராயிருப்பவர். 639. புராண: — பழமையானவர். அல்லது பதினெட்டு புராணங்களாக இருப்பவர். 640 புருஷ: — இதயத்தில் வீற்றிருப்பவர். 641. புருஷேச: — மோஹினி அவதாரம் செய்த திருமாலின் கணவர். 642. புரந்தர: — இந்திரன் வடிவானவர்.

(79) 643. காலாக்னிருத்ர: — மறையும் உலகத்தை எரிக்கும் அக்னி உருவானவர் 644. ஸர்வேச: — எல்லாவற் றிற்கும் ஈசர். 645. சமரூப: — ஆத்ம குணங்கள் எட்டில் சமம் என்ற முதலாவது குணமாய் இருப்பவர். 646. சமேச்வர: — சமம் என்ற குணத்துக்குத் தலைவர். 647. ப்ரலயானலக்ருத் — ப்ரளயகால அக்னியை உண்டுபண்ணு பவர். 648. பவ்ய: — அதை விருத்தி செய்பவர். 649. ப்ரள யாநலநாசக: — ப்ரளய கால அக்னியை அழிப்பவர்.

(80) 650. த்ரயம்பக: — மூன்று கண்களையுடையவர். 651. அரிஷட்வர்கநாசக: — காமம் முதலிய நம் உள்ளேயே இருக்கும் ஆறு பகைவர்களை அழிப்பவர். 652. தனத ப்ரிய: — குபேரனிடத்தில் அன்புள்ளவர். 653. அக்ஷோப்ய: — கலக்கமடையாதவர். 654. க்ஷோபரஹித:— குழப்பமற்றவர். 655. க்ஷோபத: — குழப்பத்தைக் கொடுப்பவர். 656. க்ஷோபநாசக: — குழப்பத்தை நாசம் செய்பவர்.

(81) 657. ஸதம்ப: — கர்வத்தோடு கூடியவர். 658. தம்பரஹித: — கர்வமற்றவர். 659. தம்பத: — கர்வத்தைக் கொடுப்பவர். 660. தம்பநாசக: — கர்வத்தை அழிப்பவர். 661. குந்தேந்து சங்க தவள: — வெள்ளை மலர், சந்திரன், வெண்மையான சங்கு இவைகள் போன்று வெளுப்பான வர். 662. பஸ்மோத்தூளித விக்ரஹ: — திருநீற்றால் பூசப் பட்ட உடலையுடையவர்.

(82) 663. பஸ்மதாரண ஹ்ருஷ்டாத்மா — திருநீறு அணிந்த பக்தர்களிடத்தில் மகிழ்ச்சி கொள்பவர். 664. துஷ்டிபுஷ்டியரிஸூதன: — மகிழ்ச்சி, நிறைவு இவைகளின் பகையை ஒழிப்பவர். 665. ஸ்தாணு: — அசைவற்றிருப்பவர். 666. திகம்பர:— திசைகளையே ஆடையாகக் கொண்டவர். 667. பர்க: — பாபங்களை வறுத்தெடுத்து அழிப்பவர். 668. பகநேத்ரபித் — பகன் என்பவனின் கண்களைப் பிடுங்கியவர். (தக்ஷயாகத்தில் நடைபெற்றது) 669. உஜ்வல: — மேலே கிளம்புகிற ஒளியுடையவர்.

(83) 670. த்ரிகாக்னிகால: — கார்ஹபதியம், தக்ஷிணாக்னி, ஆஹவனீயம் என்கிற மூவகை அக்னிகளைக் கொண்ட அக்னிஹோத்ரம் என்ற கர்மாவை காலத்தில் நடக்கும்படிச் செய்பவர். 671. காலாக்னி: — உலக முடிவில் தோன்றும் அக்னியாக இருப்பவர். 672. அத்விதீய: — இரண்டற்ற பரம்பொருள். 673. மஹாயசா: — பெரும் புகழுடையவர். 674. ஸாமப்ரிய: — ஸாம வேதத்தில் பிரியம் உள்ளவர். 675. ஸாமவேத்தா — ஸாமவேதமறிந்தவர். 676. ஸாமக: — ஸாம வேதத்தைச் சேர்ந்தவர். 677. ஸாமகப்ரிய: — ஸாமகானம் செய்பவர்களிடம் பிரியம்உள்ளவர்.

(84) 678. தீர: — தைரியம் உள்ளவர். 679. தாந்த: — இரண்டாவதான ஆத்ம குணம் உள்ளவர். 680. மஹாதீர: — மிக்க தைரியம் உள்ளவர். 681. தைரியதா — தைரியத்தைக் கொடுப்பவர். 682. தைர்ய வர்த்தக: — தைரியம் உள்ளவர்களை விருத்தி செய்பவர். 683. லாவண்ய ராசி: — அழகின் குவியல் போன்றவர். 684. ஸர்வக்ஞ: — அனைத்தும் அறிந்தவர். 685. ஸுபுத்தி: — நல்ல புத்தியுடையவர், 686. புத்திமான் — அறிவுள்ளவர். 687. வர: — சிறந்தவர்.

(85) 688. தும்பவீண: — தும்புரு என்னும் பெயர் கொண்ட வீணை வாத்தியத்தை ரசிப்பவர். 689. கம்பு

கண்ட: — சங்கு போன்ற கழுத்தையுடையவர். 690. சம்ப ராரி நிக்ருந்தன: — மன்மதனை அழித்தவர். 691. சார்தூல சர்மவஸன: — புலித்தோலை ஆடையாகக்கொண்டவர். 692. பூர்ணனந்த: — நிரம்பிய மகிழ்ச்சியுடையவர். 693. ஜகத்ப்ரிய: — உலக ஜனங்களிடத்தில் அன்பு கொண்டவர்.

(86) 694. ஜயப்ரத: — வெற்றி கொடுப்பவர். 695. ஜயாத்யக்ஷ: — வெற்றியின் தலைவர். 696. ஜயாத்மா — வெற்றியே உருவாயமைந்தவர் (வியாஸமுனிவரால் இயற்றப்பட்ட பதினெட்டு பர்வாக்கள் கொண்ட பாரதமாய் இருப்பவர் என்றும் பொருள் கொள்ளலாம்). 697. ஜய காரண: — வெற்றிக்குக் காரணமாயிருப்பவர் (பாரதத்தை எழுதிய விநாயகருக்கும் காரணமானவர்). 698. ஜங்கமா ஜங்கமாகார: — அசைவதும் அசையாததுமான எல்லா வற்றின் உருவானவர். 699. ஜகதுதிபத்திகாரண: — உலகம் உண்டாவதற்குக் காரணமாயிருப்பவர்.

(87) 700. ஜகத்ரக்ஷாகர: — உலகத்தைக் காப்பாற்றும் தொழிலைச் செய்பவர். 701. வச்ய: — பக்தர்களுக்குக் கட்டுப்பட்டவர். 702. ஜகத்ப்ரலயகாரண: — உலகம் அடங்குவதற்கு (மறைவதற்கு)காரணமானவர். 703. புஷ்ப தந்தபிதுத்க்ருஷ்ட: — புஷ்பதந்தன் என்ற கவியினல் நன்கு துதிக்கப்பட்டவர். 704. பஞ்சயக்ஞ ப்ரபஞ்ஜக: — தக்ஷப்ரஜாபதியின் யாகத்தை அழித்தவர்.

(88) 705. அஷ்டமூர்த்தி: — ஜலம், அக்னி, யஜமானன், ஸூரியன், சந்திரன், ஆகாயம், பூமி, காற்று ஆகிய எட்டையும் தனது உடலாய்க் கொண்டவர். 706. விச்வ மூர்த்தி: — உலகமே உருவானவர். 707. அதிமூர்த்தி: — எல்லாம் உருவானவர். 708. அமூர்த்திமான் — உருவ மற்றவர். 709. கைலாசசிகராவாஸ: — கயிலைமலையின் சிகரத்தைத் தம் இருப்பிடமாகக் கொண்டவர். 710. கைலாசசிகரப்ரிய: — கைலாய சிகரத்தில் பிரியம் கொண்டவர்.

(89) 711. பக்தகைலாசத: — பக்தர்களுக்குத் தனது உலகமான கைலாயத்தை அளிப்பவர். 712. ஸூக்ஷ்ம: — மிகவும் நுண்மையானவர் (கண்ணுக்குப் புலப்படாதவர்) 713. ஸர்வக்ஞ: — முற்றறிவுடையவர். 714. ஸர்வசிக்ஷக: — அனைவரையும் தண்டிப்பவர் (தவறு செய்யும் போது) 715. ஸோம: — சந்திரனாய் இருப்பவர் அல்லது உமையுடன் கூடியவர் (துர்காஸூக்தத்தில் சொல்லப்பட்டுள்ளது) 716. ஸோமகலாதார: — சந்திர கலை உண்டாவதற்குக் காரணமானவர். 717. மஹாதேஜா — பெரிய ஒளியாயிருப்பவர். 718. மஹாதபா; — தவத்தில் சிறந்தவர்.

(90) 719. ஹிரண்யஸ்மச்ரு: — தங்கமயமான மீசை உடையவர். 720. ஆனந்த: — ஆனந்தமாயிருப்பவர். 721. ஸ்வர்ணகேச: — தங்க மயமான கேசத்தை (தலைமுடியை) உடையவர். 722. ஸுவர்ணத்ருக் — தங்கத்தைத் தன்னிடத்தே கொண்டவர். 723. ப்ரம்மா — நான்முகனாய் இருப்பவர். 724. விஸ்வஸ்ருக்— உலகத்தைப் படைத்தவர். 725. உர்வீச: — பூமிக்குத் தலைவர். 726. மோசக: — பிறவிக் கடலினின்றும் விடுவிப்பவர். 727. பந்தவர்ஜித: — கட்டு ஒன்றும் இல்லாதவர்.

(91) 728. ஸ்வதந்த்ர: — கட்டுப்பாடு ஏதும் இல்லாதவர். 729. ஸர்வதந்த்ராத்மா — அறுபத்தி நான்கு தந்திரங்களின் உருவமாய் இருப்பவர். 730. த்யுதிமான் — ஒளியோடு கூடியவர். 731. அமிதப்ரப: — உவமையில்லாத காந்தியையுடையவர். 732. புஷ்கராக்ஷ: — செந்தாமரைக் கண்ணன். 733. புண்யகீர்த்தி: — புனிதமான புகழை உடையவர். 734. புண்யச்ரவணகீர்த்தன: — பெயரைக் கேட்பதாலும் பாடுவதாலும் பக்தர்களுக்குப் புண்ணியத்தை அளிப்பவர்.

(92) 735. புண்யமூர்த்தி: — புண்ணியமே உருவானவர். 736. புண்யதாதா — புண்ணியத்தைக் கொடுப்பவர்.

737. புண்யாபுண்யபலப்ரத: — புண்ய பாவங்களுக் கேற்றவாறு பலனைக் கொடுப்பவர். 738. ஸாரபூத: — எல்லாவற்றிலும் ஸாரமாயிருப்பவர். 739. ஸ்வரமய: — வேதங்களின் ஸ்வரமாயிருப்பவர். 740. ரஸபூத: — தைத் திரிய உபநிஷத்தில் சொல்லியபடி பரம்பொருளாய் இருப் பவர். 741. ரஸாயன: — பிறவியாகிய நோய்க்கு மருந்தாக இருப்பவர்.

(93) 742. ஓம்கார: — ஓம் என்ற எழுத்தாக இருப் பவர். 743. ப்ரணவ: — ஓம்காரத்தின் பொருளாக இருப் பவர். 744. நாத: — மறைகளின் ஒலியாக இருப்பவர். 745. ப்ரணதார்த்திப்ரபஞ்ஜன: — தன்னை வணங்கும் பக்தர்களின் துன்பத்தைப் போக்கடிப்பவர். 746. நிகடஸ்த்த: — பக்தர்களுக்கு அருகில் இருப்பவர். 747. அதிதூரஸ்த்த: — துஷ்டர்களுக்குத் தூரத்தில் இருப்பவர் 748. வசீ — பக்தர்களுக்கு வசமானவர். 749. ப்ரஹ் மாண்டநாயக: — பலகோடி அண்டங்களுக்குத் தலைவரா யிருப்பவர்.

(94) 750. மந்தாரமூலநிலய: — நினைத்ததையெல் லாம் கொடுக்கும் தேவலோகத்து மந்தாரம் என்னும் மரத்தினடியில் இருப்பவர். 751. மந்தாரகுசுமப்ரிய: — மந்தார மலரில் பிரியமுள்ளவர். 752. வ்ருந்தாரகப்ரிய தம: — தேவக் கூட்டங்களிடம் மிகவும் பிரியம் உள்ளவர். 753. வ்ருந்தாரகவிராஜித: — தேவர்களால் வணங்கப் பட்டவர்.

(95) 754. ஸ்ரீமான்-செல்வம் நிறைந்தவர் 755. அனந்த கல்யாண பரிபூர்ண மஹோதய: — முடிவில்லாத கல்யாண குணங்கள் நிரம்பப் பெற்று விளங்குபவர். 756. மஹோத் ஸாஹ: —மிகுந்த முயற்சியுடையவர். 757. விச்வபோக்தா— உலகத்திலுள்ள அனைத்தையும் புசிப்பவர். 758. விச் வாசாபரிபூரக: — உலக மக்களுக்குத் தேவைகளை வேண் டிய அளவு கொடுப்பவர்.

(96) 759. ஸுலப: — எளிமையானவர் (பக்தர்களுக்கு) 760. ஸுலபாலப்ய: — பக்தர்கள் அல்லாதவர்களால் எளிதில் அடைய முடியாதவர். 761. லப்ய: — அடையத்தக்கவர் 762. லாபப்ரவர்த்தக: — லாபம் கிடைக்கும்படிச் செய்பவர். 763. லாபாத்மா — லாபமாய் இருப்பவர். 764. லாபத: — லாபத்தைக் கொடுப்பவர். 765. வக்த்ர: — முகமாய் இருப்பவர். 766. த்யுதிமான் — ஒளிமயமாய் இருப்பவர். 767. அனஸூயக: — பொறுமையற்றவர்.

(97) 768. ப்ரம்மசாரீ — வேதம் கற்கும் முதல் ஆச்ரமத்தில் இருப்பவர். 769. த்ருடாசாரீ — உறுதியான ஆசாரத்தை உடையவர். 770. தேவஸிம்ஹ: — தேவர்களில் ஸிம்மம் போன்றவர். (அதாவது சிறந்தவர்) 771. தனப்ரிய: — செல்வத்தில் பிரியம் உள்ளவர். 772. வேதாட்ய: — வேதத்தையே செல்வமாகக் கொண்டவர். 773. தேவதேவேச: — தேவராஜனுக்கும் தலைவர். 774. தேவதேவோத்தமோத்தம: — பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலான எல்லாத் தேவர்களுக்கும் மேலானவர்.

(98) 775. பீஜராஜ: — வீர்யத்தின் அரசன் போன்றவர். 776. பீஜஹேது: — வீர்யத்திற்குக் காரணமாய் இருப்பவர். 777. பீஜத: — பீஜத்தைக் கொடுப்பவர். 778. பீஜவ்ருத்தித: — பீஜத்தின் வளர்ச்சியைக் கொடுப்பவர். 779. பீஜாதார: — பீஜத்திற்கு ஆதாரமாயிருப்பவர். 780 பீஜரூப: — பீஜத்தின் உருவாய் விளங்குபவர். 781. நிர்பீஜ: — வீர்யம் இல்லாதவராயிருப்பவர். 782. பீஜநாசக: — வீர்யத்தை ஒழிப்பவர்.

(99) 783. பராபரேச: — எல்லாவற்றுக்கும் மேலான ஈச்வரன். 784. பரத: — மேன்மையைக் கொடுப்பவர். 785. பிங்கல: — சிவப்பும் வெளுப்பும் கலந்த நிறம் உள்ளவர். 786. யுக்மலோசன: — இரண்டு கண்கள் உடையவர். 787. பிங்கலாக்ஷ: — சிவந்த கண்களையுடையவர். 788. ஸுரகுரு: — தேவகுருவின் (பிரஹஸ்பதி) வடிவாய் இருப்பவர்.

789. குரு: - தக்ஷிணாமூர்த்தியாகி உலக குருவாக இருப்பவர். 790. ஸுரகுருப்ரிய: — தேவகுருவான பிரஹஸ்பதியிடம் பிரியம் உள்ளவர்.

(100) 791. யுகாவஹ: — நான்கு யுகங்களைச் செய் பவர். 792. யுகாத்யக்ஷ: — யுகங்களின் தலைவர். 793. யுகக்ருத் — யுகத்தைச் செய்பவர். 794. யுகநாசக: — யுகத்தை அழிப்பவர். 795. கற்பூரகௌர: — கற்பூரம் போன்று வெண்மையானவர். 796. கிரிச: — கைலாச மலையில் வசிப்பவர். 797. கௌரீ குரு குஹாச்ரய: — கௌரியின் தந்தையான இமயமலையின் குகையை இருப் பிடமாகக் கொண்டவர்.

(101) 798. தூர்ஜடி: — ஜடை முடியுடையவர். 799. பிங்கல ஜட: — சிவந்த ஜடையுடையவர். 800. ஜடா மண்டலமண்டித: — மிகவும் விரிவான ஜடை முடியைக் கொண்டவர். 801. மனோஜவ: — மனதைக் காட்டிலும் வேகமானவர். 802. ஜீவஹேது: — உயிரோடு இருப்பதற்கு காரணமானவர். 803. அந்தகாஸுர ஸூதன: — அந்தகன் என்ற அசுரனைக் கொன்றவர்.

(102) 804. லோகபந்து: — உலக மக்கள் அனைவருக் கும் உறவினர். 805. லோகநாத: — உலகமனைத்துக்கும் தலைவர். 806. பாண்டுர: — வெண்மையானவர். 807. ப்ரமதாதிப: — சிவகணங்களின் தலைவர். 808. அவ்யக்த லக்ஷண: — அறிய முடியாத லக்ஷணம் உடையவர். 809. யோகீ — யோகியாக இருப்பவர். 810. யோகீச: — யோகி களின் தலைவர். 811. யோகபுங்கவ: — யோகத்தில் சிறந் தவர்.

(103) 812. பூதாவாஸ: — ஜீவர்களுக்கு இருப்பிட மானவர். 813. வாஸுதேவ: — கிருஷ்ணனை இருப்பவர். 814. ஸுராவாஸ: — தேவர்களுக்கு இருப்பிடமாக இருப்ப வர். 815. ஸுமங்கல: — மங்கள உருவாயிருப்பவர்.

816. பவவைத்ய: — பிறவி நோய்க்கு வைத்தியர். 817. யோகிவைத்ய:— சனகர் முதலிய யோகிகளுக்கு ஞானத்தை உபதேசிப்பவர். 818. யோகிசிம்ஹஹ்ருதாசன: — சிறந்த யோகிகளின் ஹ்ருதயததை ஆசனமாகக் கொண்டவர்.

(104) 819. உத்தம: — உயர்ந்தவர். 820. அநுத்தம: — மிகவும் உயர்ந்தவர். 821. சக்தக:— சக்தியுள்ளவர். 822. கால கூட விஷாதன: — கால கூடம் என்னும் விஷத்தைச் சாப்பிட்டவர். 823 ஆசாஸ்ய: — பக்தர்களை ஆசிர்வதிப்பவர். 824. காமநீயாத்மா — விரும்பத்தக்க உருவமுடையவர். 825. சுப: — சுபத்தைச் செய்பவர். 826. ஸுந்தரவிக்ரஹ: — அழகிய சரீரத்தையுடையவர்.

(105) 827. பக்தகல்பதரு: — பக்தர்களுக்கு விரும்பியதைக் கொடுக்கும் கல்ப விருக்ஷமாய் இருமபவர். 828. ஸ்தோதா — துதிப்பவர். 829. ஸ்தவ்ய: — துதிக்கத்தக்கவர். 830. ஸ்தோத்ரவரப்ரிய: — பக்தர்கள் செய்யும் உயர்ந்த துதிகளில் பிரியமுள்ளவர், உயர்ந்த துதியான ஸ்ரீ ருத்ரததில் பிரியமுள்ளவர். 831. அப்ரமேயகுணாதார:— அளவிட முடியாத குணங்களுக்கு ஆதாரமானவர். 832. வேதக்ருத் — வேதத்தை உண்டாக்கியவர். 833. வேதவிக்ரஹ: — வேதமே உருவானவர்.

(106) 834. கீர்த்யாதார: — புகழுக்கு ஆதாரமானவர். 835. கீர்த்திகர: — புகழைக் கொடுப்பவர். 836. கீர்த்திஹேது: — புகழுக்குக் காரணமாயிருப்பவர். 837. அஹேதுக: — காரணமற்றவர். 838. அப்ரம்ருஷ்ய: — தேடமுடியாதவர். 389. சாந்திபத்ர: — அமைதியும் மங்களமும் ஆனவர். 840. கீர்த்திஸ்தம்ப: — தூண் போன்று உயர்ந்த புகழுடையவர். 841. மனோமய: — மனமே உருவாய் இருப்பவர்.

(107) 842. பூசய: — தரையில் படுத்திருப்பவர். 843. அன்னமய: — அன்னமே (உணவுப்பொருள்கள்)

உருவானவர். 844. போக்தா — அனுபவிப்பவர். 845. மஹேஷ்வாஸ:— பெரிய வில்லேயும் அம்பையும் உடையவர். 846. மஹாதனு: — பெரிய உடலே உடையவர். 847. விக்ஞானமய:—அறிவே உருவானவர். 848. ஆனந்தமய:— மகிழ்ச்சியே உருவாய் நிறைந்தவர். 849. ப்ராணமய: — ஜீவர்களின் மூச்சுக்காற்ருய் இருப்பவர். 85 . அன்னத: — அன்னத்தைக் கொடுப்பவர்.

(108) 851. ஸர்வலோகமய: — எல்லா உலகமும் ஆனவர். 852. யஷ்டா — யாகம் செய்பவர். 853. தர்மாதர்மப்ரவர்த்தக: — தர்மம் அதர்மம் இரண்டிலும் ஜீவர்களே ஈடுபடும்படிச் செய்பவர். 854. அநிர்விண்ண: — துன்பமடையாதவர். 855. குணக்ராஹீ — ஜனங்களிடமிருந்து நல்ல குணங்களேயே எடுத்துக கொள்பவர். 856. ஸர்வதர்மபலப்ரத: — செய்யப்படும் தர்மங்கள் எல்லாவற்றுக்கும் பயனேக் கொடுப்பவர்.

(109) 857. யந்தா — எல்லாவற்றையும் நடத்துபவர். 858. ஸுதார்த்ரநயன: — அம்ருதத்திஞல நனேந்த கண்களே உடையவர். 859. நிராசீ — ஆசையற்றவர். 860. அபரிக்ரஹ: — ஒன்றையும் பெற்றுக்கொள்ளாதவர். 861. பரார்த்தவ்ருத்தி: — பிறருக்காகவே காரியம் செய்பவர். 862. மதுர: — இனிமையானவர். 863. மதுரப்ரிய தர்சன: — இனிமையாய் இருப்பவர்களுக்கு அன்புடன் காட்சியளிப்பவர்.

(110) 864. முக்தாதாமபரீதாங்க: — முத்து மாலேயிஞல் அணி செய்யப்பட்ட சரீரத்தை உடையவர். 865. நிஸ்ஸங்க: — ஒட்டுதல் இல்லாதவர். 866. மங்களாகர: — மங்களத்துக்கு இருப்பிடமானவர். 867. ஸுகப்ரத: — பேரின்பத்தைக் கொடுப்பவர். 868 ஸுகாகார: — பேரின்பமே உருவானவர். 869. ஸுகதுக்கவிவர்ஜித: — ஸுகம், துக்கம் இரண்டிலிருந்தும் விடுபட்டவர்.

(111) 870. விச்ருங்கல: — கட்டில்லாதவர். 871. ஜகத்கர்த்தா – உலகைப்படைத்தவர். 872. ஜிதஸர்வ: — எல்லாவற்றையும் ஜயித்தவர். 873. பிதாமஹ: — பிரம்மாவாயிருப்பவர். 874. அநாமய: — நோயற்றவர். 875. அக்ஷய: — அழிவற்றவர். 876 முண்டீ — சங்கராசாரிய ரூபத்தில் வந்தவர். 877. ஸ்வரூப: — உருவத்தோடு கூடியவர். 878. ரூபவர்ஜித: — உருவமில்லாதவர்.

(112) 879. அதீந்த்ரிய: — புலன்களுக்கு அப்பாற்பட்டவர். 880. மஹாமாய: — பெரிய மாயையாக இருப்பவர். 881. மாயாவி — மாயையைத் தன்னிடமே கொண்டவர். 882. விகதஸ்வர: — பேச்சில்லாது தக்ஷிணாமூர்த்தியாக இருப்பவர். 883. அம்ருத: — மரணமற்றவர். 884. சாச்வத: — என்றும் நிலையாக இருப்பவர். 885. சாந்த: —அமைதியானவர். 886. ம்ருத்யுஹா— மரணத்தை ஒழித்தவர். 887. ம்ருத்யுநாசக: — யமனை வென்றவர்.

(113) 888. மஹாப்ரேதாஸநாஸீன: — மஹாப்ரளய காலத்தில் மாண்டுபோன தேவர்களின் சடலங்களாகிய ஆசனத்தில் வீற்றிருப்பவர். 889. பிசாசானுசராவ்ருத: —பேய் பிசாசுகள் இவைகளால் சூழப்பட்டவர். 890. கௌரீவிலாஸஸதன: — கௌரீ தேவியின் விளையாட்டுக்கு இருப்பிடமானவர். 891. நாநாகான விசாரத: — பல வகையான சங்கீத நுட்பங்களில் தேர்ச்சி பெற்றவர்.

(114) 892. விசித்ரமால்யவஸன: — அழகான மலர் மாலைகள், ஆடைகள் அணிந்தவர். 893. திவ்ய சந்தன சர்ச்சித: — தேவலோகத்து சந்தனத்தால் பூசப்பட்டவர். 894. விஷ்ணு ப்ரம்மாதி வந்த்யாங்க்ரி: — விஷ்ணு பிரம்மா முதலிய எல்லோராலும் வணங்கப்படும் திருவடிகளையுடையவர். 895. ஸுராஸுரநமஸ்க்ருத: — தேவர்களாலும் அசுரர்களாலும் வணங்கப்படுபவர்.

(115) 896. கிரீடகோடி பாலேந்து மணி கங் கண பூஷித: — மகுடத்தில் வைக்கப்பட்ட பிறைச்சந்திரனையும், மணிகளால்ஆன காப்புகளையும், அணிந்தவர். 897. ரத்னாங்க தாங்க: — இரத்தினங்களால் செய்யப்பட்ட தோள்வளை களையணிந்தவர். 898 ரத்னேச: — நவரத்தினங்களையும் தன்னிடமே கொண்டவர். 899 ரத்னரஞ்ஜிதபாதுக: — இரத்தினங்களால் இழைக்கப்பட்ட பாதுகைகளையுடையவர்.

(116) 900. நவரத்னகணோபேத: — நவரத்னமணிக் கூட்டங்களோடு கூடியவர். 901. கிரீடீ — கிரீடம் அணிந் தவர். 902. ரத்னகஞ்சுக: — இரத்தினங்களால் செய்யப் பட்ட கவசத்தை உடையவர். 903. நாநாவிதானேக ரத்ன லஸத் குண்டல மண்டித: — பலபலவிதமான இரத்தினங் களால் செய்யப்பட்ட குண்டலங்களை அணிந்து விளங்குபவர்.

(117) 904. திவ்யரத்ன கணகீர்ண கண்டாபரண பூஷித: — உயர்ந்த இரத்தினங்களால் செய்யப்பட்ட மாலை களைக் கொண்ட கழுத்தையுடையவர். 905 நவகால மணிர் நாஸாபுடப்ராஜித மௌக்திக: — அப்பொழுது புதிதாகச் செய்யப்பட்ட முத்துக்களால் அணி செய்யப்பட்ட மூக்கினை உடையவர்.

(118) 906. ரத்னாங்குலீய விலஸத்கர சாகாநகப்ரப: — இரத்தினங்களால் செய்யப்பட்ட மோதிரங்களால் ஒளி வீசு கின்ற நகங்களோடு கூடிய விரல்களைக் கொண்ட கிளைகள் போன்ற நீண்ட கைகளையுடையவர். 907. ரத்னப்ராஜத் ஹேமஸூத்ரலஸத்கடிதட: — ரத்னங்கள் இழைக்கப்பட்டு தங்கத்தினால் செய்யப்பட்ட அரைஞாணைக் கொண்ட இடுப் போடு கூடியவர். 908. படு: — திறமை மிக்கவர். (சிருஷ்டி யாதி பஞ்சக்ருத்தியங்களில் திறமைமிக்கவர் எனக்கொள்க).

(119) 909. வாமாங்கபாகவிலஸத் பார்வதீ வீக்ஷண ப்ரிய: — இடது பாகத்தில் விளங்குகின்ற பார்வதி தேவியின்

பார்வையில் பிரியமுள்ளவர். 910. லீலாவிளம்பிதவபு: -- விளையாட்டாகவே சரீரத்தை எடுத்துக் கொண்டவர். 911. பக்தமானஸ மந்திர: — பக்தர்களின் மனதைக் கோயிலாகக் கொண்டவர்.

(120) 912. குந்தமந்தார புஷ்பௌக லஸத் வாயுநிஷேவித: — மல்லிகை, மந்தாரை முதலிய புஷ்பக்கூட்டங்களிலிருந்து வருகிற வாசனையோடு கூடிய காற்றை அனுபவித்து மகிழ்பவர். 913. கஸ்தூரிவிலஸத்பால: — கஸ்தூரிப் பொட்டினால் விளங்குகின்ற நெற்றியையுடையவர். 914. திவ்ய வேஷ விராஜித: — தெய்வீகமான வேஷங்களால் ஒளிமயமானவர்.

(121) 915. திவ்யதேஹப்ரபாகூட ஸந்தீபிததிகந்தர: — தெய்வீகமான சரீரத்தின் காந்திக்கூட்டத்தினால் ஒளிவீசும் படிச் செய்யப்பட்ட பத்துத் திசைகளை உடையவர். 916. தேவாஸுர குருஸ்தவ்ய: — தேவ குருவான பிரஹஸ்பதியாலும், அசுரகுருவான சுக்கிரனாலும் நன்கு துதிக்கப்பட்டவர். 917. தேவாஸுர நமஸ்க்ருத: — தேவர்களாலும் அசுரர்களாலும் வணங்கப்பட்டவர்.

(122) 918. ஹஸ்தராஜத்புண்டரீக: — கையில் தாமரையுடன் விளங்குபவர். 919. புண்டரீகநிபேக்ஷண: — அப்பொழுது அலர்ந்த தாமரையைப் போன்ற கண்களை உடையவர். 920. ஸர்வசாஸ்திரகுண: — எல்லா சாஸ்திரங்களிலும் கூறப்பட்ட குணமாயிருப்பவர். 921. அமேய: — அவைகளாலும் அளவிட முடியாதவர். 922. ஸர்வலோகேஷ்டபூஷண: — எல்லா உலகினுக்கும் பிரியமான தெய்வம்.

(123) 923. ஸர்வேஷ்டதாதா — எல்லோருக்கும் அவரவர் விரும்பியதைக் கொடுப்பவர். 924 ஸர்வேஷ்டஸ்புரன்மங்களவிக்ரஹ: — எல்லோரும் விரும்பி தரிசனம்

செய்யக்கூடிய மங்கள உருவானவர். 925. அவித்யாலேச ரஹித: — அறியாமை என்பது கொஞ்சம்கூட இல்லாதவர். 926. நாநாவித்யைகஸம்ச்ரய: — எல்லா வித்தைகளுக்கும் தானே இருப்பிடமானவர்.

(124) 927. மூர்த்தி: — எட்டு விதமான சரீரம் கொண்டவர், அஷ்டமூர்த்தி. 928. பவ: — பவன் என்னும் பெயர் உடையவர், உலகத்தைப் படைத்தவர் 929. க்ருபாபூர: — கருணை நிரம்பியவர். 930. பக்தேஷ்டபலபூரக: — பக்தர்கள் விரும்பியபலனைக் கொடுப்பவர். 931. ஸம்பூர்ண காம: — ஆசைகள் நிறைவு பெற்றவர் 932. ஸோமாக்னி:- சந்திரனும் அக்னியாயும் இருப்பவர். 933. நிதி: — புதையல் போன்றவர். 934. ஸௌபாக்யதாயக: — பெண்களுக்குச் சிறந்த தெய்வீகச் சின்னத்தை அளிப்பவர்

(125) 935. ஹிதைஷீ — பக்தர்களுக்கு நன்மையையே விரும்புபவர். 936. ஹிதக்ருத் — பக்தர்களுக்கு நன்மையையே செய்பவர். 937. ஸௌம்ய: — அழகானவர். 938 பரார்த்தைக ப்ரபஞ்ஜன:— பிறருக்கு உதவி செய்வதையே ஒரே கொள்கையாகக் கொண்டவர். 939. சரணாகத தீனார்த்த பரித்ராணபராயண: — அடைக்கலம் புகுந்தவன், ஏழை, துன்புற்றவன் இவர்களைக் காப்பாற்றுவதில் குறியாய் இருப்பவர்.

(126) 940. விஷ்ணு: — எங்கும் வியாபித்திருப்பவர், திருமாலின் வடிவானவர். 941. நேதா — தலைவர். 942. வஷட்கார: —வேதப்பொருளானவர். 943. ப்ராஜிஷ்ணு: — ஒளிமயமானவர். 944. போஜனம் — உணவாயிருப்பவர். 945 ஹவி: – ஹோமதிரவியமாயிருப்பவர் 946 போக்தா— சாப்பிடுபவர். 947. போஜயிதா — சாப்பிடச் செய்பவர். 948. ஜேதா — ஜெயிப்பவர். 949. ஜிதாரி — பகைவர்களை வெல்பவர். 950. ஜிதமானஸ: — மனதை ஜெயித்தவர்.

(127) 951. அக்ஷர: — அழிவற்றவர். 952. காரண: — எல்லாவற்றுக்கும் காரணமானவர். 953. க்ருத்த: — கோபமுள்ளவர். 954. ஸ்மரத: — காமனை எரித்தவர். 955 சாரதப்லவ: — சரத் காலத்தில் ஏற்படும் துன்பக் கடலுக்கு ஓடமாயிருப்பவர். 956. ஆக்ஞாபகேச்ச: — கட்டளையிடுவதில் விருப்பமுள்ளவர். 957. கம்பீர: — அளவிடமுடியாதவர். 958. கவி: — கவிகளின் உருவாயிருப்பவர். 959. துஸ்ஸ்வப்ன நாசக: — கெட்ட கனவை அழிப்பவர்.

(128) 960. பஞ்ச ப்ரம்ம ஸமுத்பத்தி: — பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மஹேச்வரன், ஸதாசிவன் என்ற ஐந்து மூர்த்திகளையும் உண்டு பண்ணுபவர். 961. க்ஷேத்ரக்ஞ: — உலகில் நிறைந்தவர். 962. க்ஷேத்ரபாலக — நிலபுலன்களைக் காப்பாற்றுபவர். 963. வ்யோமகேச: — ஆகாயத்தையே ஜடையாக உடையவர். 964. பீமவேச: — பயங்கர நிலையில் இருப்பவர். 965. கௌரீபதி: — கௌரி தேவியின் கணவர். 966. அநாமய: — நோயற்றவர்.

(129) 967. பவாப்தி தரணோபாய: — பிறவிக் கடலைத் தாண்டுவதற்கு உதவியாக இருப்பவர். 968 பகவான் — ஆறு விதமான செல்வங்கள் நிறைந்தவர். 969. பக்தவத்ஸல: — பக்தர்களிடம் அன்புள்ளவர். 970. வர: — மேலானவர். 971. வரிஷ்ட: — மிகவும் உயர்ந்தவர். 972 நேதிஷ்ட; — அருகில் உள்ளவர். 973. ப்ரிய: — அன்புள்ளவர். 974. ப்ரியதம: — மிகவும் அன்புள்ளவர். 975 ஸுதீ: — நல்ல புத்தியாக இருப்பவர்.

(130) 976. யந்தா — எல்லாவற்றையும் நடத்துபவர். 977. யவிஷ்ட:- இளமைப் பருவத்தினர். 978. க்ஷோதிஷ்ட:- நடுவயதினர். 979. ஸ்தவிஷ்ட: — வயது முதிர்ந்தவர். 980. யமசாஸன: — (மார்க்கண்டேயர்க்காக) யமனைத் தண்டித்தவர். 981. ஹிரண்யகர்ப்ப: — ப்ரம்மதேவனுய்

இருப்பவர். 982. ஹேமாங்க: — தங்கமயமான சரீர உறுப்புக்களையுடையவர் 983. ஹேமரூப: — தங்கமே உருவமானவர். 984. ஹிரண்யத: — தங்கத்தைக் கொடுப்பவர்.

(131) 985. ப்ரம்மஜ்யோதி: — பெரும் ஒளிப்பிழம்பாய் இருப்பவர். 986. அனுவேக்ஷ்ய: — காணமுடியாதவர். 987. சாமுண்ட ஜனக: — சண்டிதேவியின் தந்தை. 988. ரவி: — சூரியனாய் இருப்பவர். 989. மோக்ஷார்த்தி ஜனஸம் ஸேவ்ய: — மோக்ஷத்தை விரும்பும் ஜனங்களால் வணங்கப்படுபவர். 990. மோக்ஷத: — மோக்ஷம் கொடுப்பவர். 991. மோக்ஷநாயக: — மோக்ஷத்தின் தலைவர்.

(132) 992. மஹாச்மசான நிலய: — உலக முடிவில் நிறைந்துபோன சுடுகாட்டில் இருப்பவர். 993. வேதாச்வ:— வேதங்களைக் குதிரையாகக் கொண்டவர். 994. பூரத: — பூமியைத் தேராகக் கொண்டவர். 995. ஸ்திர: — அசைவற்றிருப்பவர். 996 ம்ருகவ்யாத: — ம்ருகங்களை வேட்டை ஆடும் வேடன் வடிவானவர். 997. தர்மதாமா: — தர்மத்திற்கு இருப்பிடமானவர். 998. ப்ரச்சின்ன ஸ்படிக: — ஸ்படிகம் போன்றவர். 999. ரவி: — சூரியன் போன்று ஒளிமிக்கவர்.

(133) 1000. ஸர்வக்ஞ: — அனைத்தையும் அறிந்தவர் 1001. பரமார்த்தாத்மா: — மேலான ஆத்மாவாயிருப்பவர். 1002. ப்ரஹ்மானந்த: — பிரம்மத்தின் ஆனந்த உருவமானவர். 1003. ஆச்ரய: — அனைவருக்கும் இருப்பிடமானவர் 1004 விது: — சந்திரனாய் இருப்பவர். 1005. மஹேச்வர: — எல்லோருக்கும் ஈசன். 1006. மஹாதேவ: — எல்லா தேவர்களுக்கும் பெரிய தேவர் (பெரிய தெய்வம்). 1007. பரப்ரஹ்ம: — உபநிடதங்களில் கூறப்படும் பரப்ரம்மம் என்ற எல்லையற்ற பரம்பொருளாயிருப்பவர். 1008. ஸதாசிவ: — கால பரிச்சேதமில்லாத என்றைக்கும் நித்யமான பரமசிவன், அனுக்ரஹ மூர்த்தியான ஸதாசிவன்.

## உத்தரபாகம்—பலச்ருதி

(1) முருகனே! இம்மாதிரி சிறந்தவைகளாயும், பக்தர்கள் விரும்பியதைக் கொடுக்கக் கூடியவைகளுமான என்னுடைய இந்த நாமங்கள் கௌரீதேவிக்குச் சொல்லப்பட்டன.

(2) பிராம்மணர்கள், முனிவர்கள், மற்றும் இதற்குத் தகுதி உள்ளவர்கள் தூய்மையான உள்ளத்தோடு கூட இந்த நாமங்களை ஜபிக்க வேண்டும்.

(3) உடல் முழுவதும் திருநீறு அணிந்து கொண்டு ருத்ராக்ஷங்களைத் தரித்துக் கொண்டு சிவலிங்கத்தின் அருகில் இருப்பவனுய்த் தனிமையில் ஜபிக்க வேண்டும்

(4) மனதை இதிலேயே செலுத்தி புலன்களை அடக்கி ஜீவர்களிடத்தில் கருணையோடு கூட சிவலிங்கத்தை நித்யம் பூஜித்துச் சரணமடைய வேண்டும்.

(5) இந்த என்னுடைய நாமங்களை எவனொருவன் பக்தியுடன் ஜபிக்கின்றனோ, அவன் தேவர்களாலும் வணங்கப்பட்டவனாக ஆவான்.

(6) இந்த நாமங்களை நினைப்பதாலேயே ஸம்ஸாரம் என்கிற கட்டிலிருந்து விடுபட்டு நிச்சயம் எல்லாவற்றையும் அடைவான்.

(7) மேலான இந்த என்னுடைய நாமங்களே ஜபிக்கத்தக்கவை. இது அழிவற்ற செல்வத்தைக் கொடுக்கும். என்னையே தியானித்து வணங்குகிறவன் மோக்ஷத்தை அடைவான்.

(8) விபூதியைக் கவசமாய்க் கொண்டு, என்னுடைய நாமங்களை பாணம் போல் வைத்திருப்பவன் எப்பொழுதும் வெற்றியையே அடைவான், பயம் இருக்காது,

